REGD. No: TN MS (C) 244 — ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) — Phone 812818 — 4 பக்கம் விலை 35 காசு

**ஓய்வு**

ஓய்வு உயர்ந்த பண்புள்ள நண்பன் மூலம் நாம் என்ன பெற முடியுமோ அவ்வித மான மன மகிழ்ச்சியைத் தருவதாக அமைத்துக் கொள்ள வேண்டும்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா




**கல்வி**

கல்வி வயிற்றுச் சோற்றுக்கு, வாழ்விற்கு என்றிருக்கிறது. இது மாறி அறிவிற்கு கல்வி பயன்பட வேண்டும்.

-தந்தை பெரியார்

மலர் 4 — சென்னை 20-4-1980 ஞாயிறு — (★) ❋ ● ❋ (★) — வெளியூர் 21-4-1980 திங்கள் — இதழ் 162

# தமிழக ஏழை எளிய மக்களின் கடன்கள் ரத்து

PRIORITY
MDS 34
NIGHTER ELECTED
MADRAS, APR 19 (UNI) THE CONGRESS(I) DRAVIDA MUNNETRA KAZHAGAM ALLIANCE FORGED DURING THE LOK SABHA POLL TODAY RECEIVED A JOLT WHEN ALL THE FOUR CANDIDATES BACKED BY IT LOST THE BIENNIAL ELECTIONS TO THE TAMIL NADU LEGISLATIVE COUNCIL.
THE ALL INDIA ANNA DMK GOT A MORALE BOOST WITH THE SUCCESS OF ALL THE THREE CANDIDATES IT HAD SUPPORTED. THE FOURTH SEAT WAS WON BY DEPUTY CHAIRMAN OF THE COUNCIL G SWAMINATHAN.

பட்டதாரி தொகுதி, ஆசிரியர்கள் தொகுதியில் கழகம் மாபெரும் வெற்றி பெற்றிருப்பது, படுதோல்வி அடைந்த திமுகவை பெரிதும் உலுக்கியிருக்கிறது என்று யு. என். ஐ. செய்தி கூறுகிறது.

## மேலவைத் தேர்தல் வெற்றி:

# படித்த மக்கள் ஆதரவும் கழகத்தின் பக்கமே: புரட்சித் தலைவர் கருத்து

சென்னை, ஏப். 20 படித்த மக்கள் ஆதரவும் கழகத்தின் பக்கமே என்பதை மேலவைத் தேர்தல் வெற்றிகள் உணர்த்துகின்றன என்று புரட்சித்தலைவர் கருத்துத் தெரிவித்தார்.

மேலவைத்தேர்தலில் பட்டதாரி, ஆசிரியர்கள் தொகுதிகளில் கழகஅணி ஆதரித்த லீலாவதி, டாக்டர் ஜனார்த்தனம், பி. ஆர். தாமஸ், ஜி. சுவாமிநாதன் ஆகியோர் வெற்றி பெற்றனர். திமுக- இ. காங்கிரஸ் அணி ஆதரித்த வேட்பாளர்கள் அனைவரும் படுதோல்வி அடைந்தனர்.

தேர்தல் முடிவுகள் குறித்து புரட்சித்தலைவர் வெளியிட்டுள்ள அறிக்கை வருமாறு:

படித்த மக்கள் அனைத்திந்திய அண்ணா தி மு கழகத்தை ஆதரிக்க மாட்டார்கள்.

அவர்களது ஆதரவு கழகத்துக்கு இல்லை என்று உண்மைக்குமாறாகபிரச்சாரம்செய்த எதிர்க்கட்சிகளுக்கு குறிப்பாக திமுகவுக்கு படித்த மக்கள் தந்த மிகப் பெரும் அடியாகும்.

ஆசிரியர்கள், படித்தவர்கள், பட்டம் பெற்றவர்கள் இவர்கள் அனைவரும் அனைத்திந்திய அண்ணா தி மு கழகத்தால் ஆதரிக்கப்பட்டவர்கள் என்பதும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள ஒவ்வொருவரும் தகுதி வாய்ந்தவர்கள் என்பதும் அனைத்திந்திய அண்ணா தி மு கழக அரசு தமிழகத்தில் வேறு எந்த அரசும் செய்யாத அளவுக்கு ஆசிரியர்களுக்கு பல நன்மைகளைச் செய்திருக்கின்றது என்பதும் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒன்றாக இந்திய துணை கண்டத்துக்கு அறிவிக்கப்பட்டுள்ளது.

ஆசிரியர்களை மன்னிப்புக் கடிதம் தரச்சொல்லி அடிமைகளைப்போல் அவர்களை நடத்திய கருணாநிதி முதலமைச்சராக இருந்த தி மு க வின் இத்தகைய கொடுமைகளை ஆசிரியர்களும் படித்தவர்களும்மறந்து விடவில்லை என்பதற்கு இது மாபெரும் எடுத்துக் காட்டாகும்.

சந்தர்ப்பத்துக்கு ஏற்ப கட்சியிலிருந்து பதவிக்காக ஓடுகிறவர்களுக்கும் இது நல்ல பாடமாக அமைந்துள்ளது.

இப்படிப்பட்ட அறிவுசார்ந்த நல் மக்களுக்கு எங்கள் மீதுள்ள நம்பிக்கையை மேலும் அதிகப்படுத்தும் அளவிலும் தமிழகத்துக்கு எங்களுடைய தொண்டு மேலும் தொடரும்

இந்த நம்பிக்கையை காப்பாற்றிக் கொள்ளவும் இந்த தேர்தலில் ஆதரவு அளிக்காத மக்களின் நம்பிக்கையை பெறவும் ஒட்டுமொத்த தமிழக மக்களின் (படித்த மக்களுக்கும்) எதிர்கால வாழ்க்கைக்கு உத்தரவாதம் தரக் கூடிய வகையில் அமரர் அண்ணா அவர்களின் கொள்கை வழிப்படி எங்களுடைய கடமைகளை எத்தகைய எதிர்ப்பு ஏற்பட்டாலும் நிறைவேற்ற நாங்கள் எங்கள் வாழ்க்கையை அர்ப்பணிக்கிறோம்.

ஆதரித்தவர்களுக்கு நன்றி வெற்றி பெற்றவர்களுக்குப் பாராட்டு.

எதிர்த்து ஓட்டளித்தவர்கள் மீண்டும் சிந்தித்து எதிர்காலத்தில் எங்களுக்கு தர வேண்டுகிறேன்.

அன்பன்,
எம்.ஜி.ஆர்

## டாக்டர் நாவலர் நன்றி

பொதுச்செயலாளர் டாக்டர் நாவலர் அறிக்கை வருமாறு:

அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் ஆதரவோடு, தமிழகச் சட்டமன்ற மேலவை உறுப்பினருக்கான தேர்தல்களில் சிறப்பான வெற்றியைப் பெற்றுள்ள.

டாக்டர் இரா. சனார்த்தனம்
(செல்வி) லீலாவதி
பி.ஆர். தாமஸ்
ஜி சுவாமிநாதன்

ஆகியோர்க்கு அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பாக மன நிறைவான வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்,

அவர்களுக்குச் சிறப்பான வெற்றிகளைத் தேடித்தர காரணமாக இருந்த பட்டதாரி-ஆசிரியர் வாக்காளர்களுக்குக் கழகத்தின் சார்பாக உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த வெற்றிகள் படித்த பட்டதாரிகள் ஆசிரியர்கள் ஆகியோரின் ஆதரவு அ.இ அண்ணா தி மு கழகத்திற்கு இருக்கிறது என்பதைக் காட்டும் அறிகுறியாகும்.

நடைபெற இருக்கின்ற சட்ட மன்றத் தேர்தலில் படித்த பாமர மக்களின் ஆதரவு அ.இ. அண்ணா தி மு.கழகத்தின் பக்கந்தான் இருக்கும் என்பதைக் காட்டும் முன்னோடியாகவும் முதற்கட்ட எடுத்துக் காட்டாகவும் இவ்வெற்றிகள் அமைந்திருக்கின்றன.

பொதுமக்களின் நம்பிக்கையும், நன்மதிப்பும், ஆதரவும், அரவணைப்பும் (3-ம் பக்கம் பார்க்க)

## கழக அரசு கொண்டுவந்த சட்டம் அமுலாகியது

சென்னை, ஏப். 20-கடும் வட்டி வசூலிப்பவர்களிடம் கடன் வாங்கி, வட்டி கூட கட்டமுடியாமல் அவதிப்பட்டுவந்த ஏழை எளிய மக்களின் கடன்களை அடியோடு ரத்து செய்ய புரட்சித்தலைவரின் கழக அரசால் கொண்டுவரப்பட்ட சட்டம அமுலுக்கு வந்துள்ளது.

கழக அரசின் சட்டப்படி ஆண்டுக்கு 4 ஆயிரத்து 800 ரூபாய்க்கு குறைவாக வருமானம் உள்ள ஏழை மக்களின் கடன்கள் அடியோடு ரத்து செய்யப்படுகிறது.

தமிழ் நாட்டில் அடகு கடைக்காரர்கள், வட்டிக்கு கடன் கொடுப்போர், போன்றோர்களிடம் அதிக வட்டிக்கு ஏழை எளிய மக்கள்கடன் வாங்கி தொல்லைப்பட்டு வந்தது தெரிந்ததே.

வாங்கிய கடனுக்கு வட்டி கட்ட முடியாத நிலையிலும், கடன் தொகைக்குமேல் வட்டி கட்டிய நிலையிலும் ஏழை மக்கள் கடன்தொல்லையில் சிக்கித் தவித்து வந்தனர்.

ஏழை எளிய மக்களை அதிக வட்டி வசூலிப்போரிடம் இருந்து மீட்டிட கடந்த பிப்ரவரி மாதம் நடந்த சட்டமன்ற கூட்ட தொடரில் கழக அரசு தமிழ் நாடு 1980ம் ஆண்டு கடன் நிவாரண சட்ட முன்வடி வைத்தாக்கல் செய்தது.

சட்ட மன்றத்தில் வருவாய் துறை அமைச்சராகயிருந்த எஸ். டி,எஸ்.சால் தரத்தில் தாக்கல் செய்யப்பட்டு நிறை வேற்றப்பட்ட இச்சட்டத்தை சகலதரப்பு மக்களும் ஏகமனதாக வரவேற்று தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்திருந்தனர்.

## அடியோடு ரத்து

கழக அரசு கொண்டு வந்த இச்சட்டப்படி 31-12-79ல் முடிவடைந்த ஆண்டில் கிராமங்கள் மற்றும் நகர்ப்புறங்களில் வசிப்போரின் குடும்ப மொத்த வருமானம் நாலாயிரத்து 800க்கும் மேற்படாமல் உள்ள அனைவரின் 1980 ஜனவரி 1-ந் தேதிக்கு முன்பு வாங்கியுள்ள கடன்கள் முழுவதும் ரத்து செய்யப்படுகிறது.

இச்சட்டம் வருவாய்த் துறையைச்சேர்ந்த தாசில்தார்களால் அமுல்படுத்தப்படுகிறது.

இச்சட்டப்படி நிவாரணம் பெறவிரும்பும் கடன் பெற்ற ஏழை எளிய மக்கள் தங்களுடையவருட வருமானம், குறித்து சான்றிதழ் மற்றும் தாசில்தார் துணை தாசில்தார் வட்டார வளர்ச்சி அலுவலர், கூட்டுறவு சார்பதிவாளர், ஆகியோர் எவரேனும் ஒருவர் முன்பு உறுதிப்பிரமாணம் இவற்றை இணைத்து மனு செய்யவேண்டும்.

சட்டம் வெளியிடப்பட்ட நேற்றிலிருந்து 6 மாத காலத்திற்குள் இந்த மனுவை அளிக்கவேண்டும் நியாயமான காரணம் இருந்தால் இந்தக் காலக்கெடு மேலும் ஒரு மாத காலம் நீடிக்கலாம்.

மனுபாரம், தாலுக்கா அலுவலகங்களில் பெற்றுக் கொள்ளலாம்.

## நமது சாதனை

1976ம் ஆண்டு ஆளுநர் ஆட்சிக் காலத்தில் கடன் நிவாரணச் சட்டம் ஒன்று கொண்டு வரப்பட்டது.

இச்சட்டப்படி 2 ஆயிரத்து 400க்கும் குறைவாக ஆண்டு வருமானம் உள்ள கிராமப்புற மக்கள் மட்டுமே பயன் அடைந்தார்கள்.

நிலம் இல்லாத உழவுத் தொழிலாளர்கள், சிறு விவசாயிகள், கைவினைஞர்கள் ஆகியோருக்கு மட்டுமே இச்சட்டம் பயனளித்தது. நகர்ப்புற மக்கள் இதனால் பயனடையவில்லை.

இதனால் பெரும்பாலான ஏழைகள் இதனால்நன்மை அடையவில்லை 1976ம் ஆண்டுக்குப் பிறகு கடன் பட்டுள்ள ஏழைகள் இச்சட்டப்படி பயன் பெற முடியாமல் கஷ்டப்பட்டார்கள்.

ஏழை எளிய மக்களின் கடன் தொல்லையை நீக்க புரட்சித்தலைவர் அரசு புதிய கடன் நிவாரணச் சட்டத்தைக் கொண்டு வந்தது.

ஆண்டு வருமானம் 4. ஆயிரத்து 800 ரூபாய்வரையிலும் உள்ள எல்லா விதமான பிரிவைச் சேர்ந்த மக்கள் (நகரம், கிராமம்) எல்லோரும் நிவாரணம் பெறுகிறவகையில் புதிய சட்டத்தை தகழக அரசு கொண்டு வந்தது.

1980. ஆண்டு ஜனவரி 1ந் தேதிக்கு முன்பு வாங்கிய நகை அடகு, பிராமிசிரி நோட்டு போன்ற எல்லா கடன்களுக்கும் இச்சட்டம்மூலம் நிவாரணம் கிடைக்கிறது, 1976-ம் ஆண்டுக்கு முன்பு கடன் வாங்கி இருந்தாலும் இச்சட்டம் பொருந்தும்.

4 ஆயிரத்து 800க்கு மேல் 10 ஆயிரம் ரூபாய்க்குள் வருமானம் உள்ள கடன்பட்ட நடுத்தரமக்களுக்கு கடன் நிவாரணச் சட்டம் கொண்டு வரப்பட்டதும் தெரிந்ததே. வருமான வரி, விற்பனை வரி விவசாய வருமான வரி கட்டாதவர்கள் கடன் பட்டிருந்தால் அவர்களுக்கு சலுகைக செய்ய கழக அரசு சட்டம் கொண்டு வந்தது.

இதனால் கடன்பட்டவர்கள் வட்டியும் முதலும் சேர்ந்து முதலைப் போல் ஒன்றரை மடங்கு செலுத்தியிருந்தால் கடன்முழுவதும் தள்ளுபடி செய்வதுபோல் ஆகும்

இதனால் அரசு அலுவலர்கள் தனியார் அலுவலகங்களில்வேலை செய்பவர்கள் மற்றும்அனைத்து தரப்பினரும் ஆண்டு ஒன்றுக்கு 10 ஆயிரம் ரூபாய்க்கு குறைவாக வருமானம் உள்ளவர்கள் நன்மை பெற வழி ஏற்பட்டது,

கழக அரசு கொண்டு வந்த இச்சட்டம் நேற்று முதல் அமுலாக்கப்பட்டுள்ளது.

பத்திரிகைகள் பார்வையில் நமது வெற்றி

பட்டதாரித் தொகுதி மேலவைத் தேர்தலில் கழகம் மாபெரும் வெற்றி

மேல்சபை தேர்தலில் அண்ணா தி.மு.க வெற்றி

AIADMK's big win in Council poll

AIADMK Success in Council Poll

அ.தி.மு.க. பெரும் வெற்றி

அதிமுக வெற்றி

அ.தி.மு.க. ஆதரவு பெற்ற 4 பேரும் வெற்றி

மேலவைத் தேர்தலில் கழகம் மாபெரும் வெற்றி பெற்றிருப்பது பற்றி செய்தி வெளியிட்ட தமிழ், ஆங்கில ஏடுகளின் தலைப்புகள்.

திருவண்ணாமலை ரயில் விபத்தில் இறந்தவர்களுக்கு இரங்கல்

# பாதிக்கப்பட்டோருக்கு உதவி: புரட்சித்தலைவர் கட்டளை

சென்னை, ஏப். 20-திருவண்ணாமலை அருகில் நடந்த கோரமான ரயில் விபத்தில் மரணமடைந்த ரயில்வே ஊழியர்களுக்கும், பயணிகளுக்கும் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்தும், விபத்து நடந்த இடத்தைச் சுற்றியுள்ள பகுதிகளில் இருக்கும் கழகச் செயல்வீரர்கள் பாதிக்கப்பட்டவர்களுக்குத் தேவையான அனைத்து உதவிகளைச் செய்யுமாறு புரட்சித்தலைவர் அன்புக் கட்டளையிட்டுள்ளார்.

உயிரிழந்தோர் குடும்பத்தினருக்கும்விபத்தில் சிக்கி பலவகையிலும் பாதிக்கப்பட்டவர்களுக்கும் கழகத்தின் சார்பிலும் தனதுசார்பிலும் நேரில் சென்று ஆறுதல் கூற புரட்சித் தலைவர் விபத்து நடந்த இடத்திற்கு ப.உ. சவை அனுப்பிவைத்துள்ளார்.

கோரமான ரயில் விபத்து குறித்து அறிந்ததும் ஆருத் துயரத்துடன் புரட்சித்தலைவர் வெளியிட்டுள்ள அறிக்கையில் குறிப்பிட்டிருப்பதாவது:

விழுப்புரம் - காட்பாடி பிரிவில் திருவண்ணாமலைக்கு அருகில் சனிக்கிழமை பிற்பகல் ஏற்பட்ட கோரமான ரயில் விபத்தில் பயணிகளும், ரயில்வே இலாகா ஊழியர்களும் உயிரிழந்தனர்

(2ம் பக்கம் பார்க்க)

## அறிக்கை எண்-16

# கழக உறுப்பினர் அட்டை வழங்குதல்

கீழ்க்கண்ட ஊர்களுக்குச் சம்பந்தப்பட்ட அமைப்பாளர்கள் முகவரிக்கு உறுப்பினர் அட்டைகள் அஞ்சல் மூலமாக அனுப்பிவைக்கப்பட்டுள்ளன.

அமைப்பாளர்கள் உறுப்பினர் அட்டைகளை முறையாக கழக உறுப்பினர்களுக்கு உடனடியாக வழங்கிடவேண்டும்.

உறுப்பினர் அட்டைகள் வழங்குவதில் எவ்விதக் குறைபாடுகளும் இல்லாமல் செயல்படுவது அமைப்பாளர்களின் பொறுப்பாகும். வழங்க மறுத்தால் அமைப்பாளர்மீது கடுமையான முறையில் ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்படும். உறுப்பினர்கள்ஒவ்வொருவரும் உறுப்பினர் அட்டையைப் பாதுகாப்பாக வைத்திருக்கவேண்டும்.

உறுப்பினர் சேர்க்கப்பட்டுள்ள, உறுப்பினர் தாள்களையும், உரிய தொகையையும் உடனடியாக தலைமை நிலையத்திற்கு அனுப்பிவைக்குமாறு பொறுப்பானவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

எம். எஸ். அப்துல்காதர்
தலைமை நிலையச் செயலாளர்

### திருச்சி மாவட்டம்

வெங்கமேடு - கே. ஈஸ்வரமூர்த்தி
பள்ளபாளையம் - கே.சி. நாகராஜி
இடைக்கட்டு - கே,எஸ் முருகேசன்
வளவெட்டிக்குப்பம் - கிருஷ்ணமூர்த்தி
இடையார் - பி.ரெங்கநாதன்
கச்சிப்பெருமாள் - கோ. ரெங்கநாதன்
ஜெ.தத்தனூர் மேலூர் - என், சாமிநாதன்
தெ. கச்சிபெருமாள் - சி. கணேசன்
நரசிங்கம்பாளையம் - ஏ. அண்ணாதுரை
வடவளர்தலைப்பு - பி. காளிமுத்து
வாப்பாக்குடி - எஸ். தங்கசாமி
த,பொட்டக்கொல்லை - பி. செல்வராசு
காடுவெட்டி - வி. கலியமூர்த்தி

சென்னை
வட்டம்
128 - கே,பி. கண்ணன்
129 - எம்.எஸ். கமால்பட்சா
134 - எம்,கே. பாலன்
135 - மயிலை வே. தமிழ்மணி
137 - ராமமூர்த்தி
148 - இரா. காசி
149 - டி கே சக்கரபாணி
150 - ப. நடராசன்

திருச்சி மாவட்டம்
ஜெயங்கொண்டம் ஒன்றியம்
அய்யப்பன் நாயக்கன்பேட்டை- எஸ், கலியமூர்த்தி
வீரசோழபுரம் - ஆர். கிருஷ்ணமூர்த்தி
அணைக்குடம்- க. செகநாதன்
மீன்சுருட்டி- ஜி.கலியமூர்த்தி
வடவீக்கம்- எஸ். சதாசிவம்
உடையார்பாளையம் - கே எஸ் காதர்
கழுமங்கலம் - சின்னப்பா
கல்லாத்தூர் - கு தங்கசாமி
உடையார்பாளையம் - ஆ அந்தோணி

வேப்பூர் ஒன்றியம்
கார்குடி - எம் பிச்சபிள்ளை
வரகூர் - ஆ தங்கவேல்
ஒலைப்பாடி - ச பெரியசாமி
புதுவேட்டகுடி (மேற்கு) - எம் முருகேசன்
கிழுமத்தூர் - வீ பாண்டியன்
சித்தளி - ஆ மருதப்பிள்ளை
கருப்பட்டங்குறிச்சி - க மணி
ஆகூர் - சி தாண்டமுத்து
வ கீரனூர் - பி சிங்காரம்
ஒகளூர் - இரா. மணி
வ அக்ரகாரம் - எம் வெங்கடாசலம்
துங்கபுரம் - டி கே ராமலிங்கம்
கோவில்பாளையம் - கு வெ தர்மலிங்கம்
ஆய்குடிகிராமம் - ஆர் கைலாசம்
குளாப்பாடி கிராமம் - பி மருதமுத்து
குளாப்பாடி - வி கலியன்
பொன்பரப்பி - கோ கங்காசலம்
தோளிஸ்வரபுரம் - இரா மாணிக்கம்
குன்னம் - அ நல்லு
கீழப்பெரம்பலூர்(தெற்கு) - எஸ் வையாபுரி
கத்தாழைமேடுகிராமம் - கே. ஏ. தனராஜன்
குழுமூர் - கே. பழமலை
தெற்கு ஒகளூர் - ஓ. எம். கே. மூர்த்தி
லப்பைக்குடிகாடு - ஏ, பாட்சாமியான்
அகரம்சிகூர் - அ. செல்லமுத்து
சி. குடிக்காடு - அ. பெரு விழியப்பா
வடக்குகோவில்பாளையம் - ஏ. சின்னசாமி
பெரிய வெண்மணி - ல. ராசமாணிக்கம்
ஒதியம் - என். பெரியசாமி
கல்லம்புதூர் - அ. செல்வராசு
வயலப்பாடிமேற்கு - பெ. வடமாலை
அந்தூர் - அ.காந்தி
நாணுக்கூர் - அரிய முத்து
நல்லறிகை - வே. வேலாயுதம்
நனமயூர் - ஏ. பெரியசாமி
வி கீரனூர் - சி. நடராசன்
ஆம்பாபூர் - ஆ. கோவிந்தன்
கீழப்பெரம்பலூர் - அ. சீனிவாசன்

### கன்னியாகுமரி மாவட்டம்

வளவத்துறை - அ.சேயை
காடஞ்சேரி - வி.நடேசன் ஆச்சாரி
அம்சி - நீ. தியாகராஜன்
புதுக்கடை - கே. செல்வம்
பிராகோடு - டி. நெல்சன்டேவிட்
கூட்டாலுமூடு - கே, ஜே. கண்ணப்பன்
பரைக்காணி - என். தர்மேந்திரகுமார்
கொல்லால் - தவசிமுத்து
ஆழஞ்குளம் - ஆர். சீத்தாராமன்
அரசகுளம் - கேசவன் நாயர்
குன்னத்தூர் - ரா. நீலகண்டன்

நெல்லை மாவட்டம்
தண்டுபத்து - வி எஸ் சந்திரன்
வேதக்கோட்டை விளை - ஈ ஜோயில்மணி
செட்டியாபத்து - கா பெரியசாமி
மருதூர்கரை - சுப்பிரமணி
பிச்சிவிளை - பி என் தனசிங் செல்வராஜ்
வெங்கட்டராமானுஜபுரம் - நெ நிஸார்

முகவை மாவட்டம்
தேவக்கோட்டை ஆகி சணபதி
ஸ்ரீரெங்கபுரம் - அரி மாணிக்க
தேவக்கோட்டை - எம் ராஜீம்
சருகணி - எஸ் பிச்சையாபிள்ளை
தேவக்கோட்டை - ஆர் எம் சுப்பிரமணியம்

மற்ற மாவட்ட, தொகுதி, ஒன்றியங்களில் உள்ள கிளைகளுக்கு உறுப்பினர் அட்டைகள் அனுப்பப்பட்டு வருகின்றன.

# புரட்சித்தலைவர் கட்டளை

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

என்றும் மற்றும் பலர் காயமடைந்தனர் என்றும் செய்தி கேட்டு ஆழ்ந்த மன வருத்தமும், துயரமும் அடைந்தேன். உயிரிழந்தவர்களின் குடும்பத்தாருக்கும், உற்றார், உறவினர்களுக்கும் எனது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறேன். காயமடைந்தவர்களுக்கும் எனது ஆறுதலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

## அதிகாரிகளுக்கு கோரிக்கை

உயிர் சேதம் அடைந்தோரின் எண்ணிக்கை அதிகரித்து வருகிற நிலையில் அதிகாரிகள் தேவையான துயர்தணிப்புநடவடிக்கைகளில் விரைவாக ஈடுபடவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். இந்த கோர ரயில்விபத்துக்கான காரணங்களை கண்டுப்பிடிப்பதிலும் இத்தகைய விபத்துக்கள் இனி நேராமல் தடுத்துபயணம் செய்யும் மக்களின் உயிருக்கும் உடமைக்கும் பாதுகாப்பு தருவதிலும், முன்னெச்சரிக்கையான நடவடிக்கைகளை ரயில்வே நிர்வாகம் உடனடியாக எடுக்கவேண்டும் என்று வலியுறுத்த விரும்புகிறேன்.

## கழகத்தினருக்கு..

விபத்து நடந்த இடத்தைச் சுற்றியுள்ள பகுதிகளில் இருக்கும் கழக செயல்வீரர்கள் பாதிக்கப்பட்டவர்களுக்கு தேவையான அனைத்து உதவிகளையும் செய்திட முன்வர வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

உயிரிழந்தோரின் குடும்பத்தாருக்கும், விபத்தில் சிக்கி பலவகையிலும் பாதிக்கப்பட்டவர்களுக்கும் கழக சார்பிலும், என் சார்பிலும் நேரில் சென்று ஆறுதல் கூறுமாறு ப. உ. சண்முகம் அவர்களை விபத்து நடந்த இடத்திற்கு அனுப்பி வைத்துள்ளேன்.

இவ்வாறு புரட்சித்தலைவர் தனது அறிக்கையில் குறிப்பிட்டுள்ளார்.

## அனந்தநாயகி

அர்ஸ் காங்கிரசின் தமிழகத் தலைவர் அனந்தநாயகி கூறியதாவது:

திருவண்ணாமலை அருகே நடந்த பயங்கர விபத்தில் பலர் இறந்திருப்பது வருந்தத்தக்கது.

அந்த விபத்துக்கு நாசவேலை காரணமா?

என்பதைக் கண்டறிய வேண்டும்.

இது நாசவேலையாக இருந்தால் இப்படிப்பட்ட நாசவேலைகளை முளையிலேயே கிள்ளி எறிய வேண்டும்.

இத்தகைய செயல்கள் மூலம் பல உயிர்கள்பலியாவதை தடுத்து நிறுத்த வேண்டும்.

விபத்து குறித்து விசாரணையை உடனடியாக நடத்த வேண்டும்.

## குமரி அனந்தன்

காந்தி காமராஜ் தேசிய காங்கிரஸ் தலைவர் குமரி அனந்தன் கூறியதாவது:

திருவண்ணாமலை அருகே நடந்த ரயில் விபத்து மிகவும் கொடூரமானது. நாசவேலை என்ற செய்தி பரவலாக உலாவுகிறது.

எப்படி இருந்தாலும் உண்மையைக் கண்டு பிடிக்க உயர் மட்டக்குழு ஒன்று உடனே அமைக்கப்படவேண்டும்.

உயிர் இழந்தோர் குடும்பங்களுக்கு நட்ட ஈடு கொடுப்பதோடு காயமுற்ற-அதனால் மிகவும் பாதிப்புக்கு ஆளானவர்களுக்கும் தகுந்த அளவில் உதவவேண்டும்.

இறந்தவர்கள் குடும்பங்களுக்கு காந்தி காமராஜ் தேசிய காங்கிரஸ் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறது

இவவாறு குமரி அனந்தன் கூறினர்.

## நெடுமாறன்

காமராஜ் காங்கிரஸ் தலைவர் நெடுமாறன் தெரிவித்ததாவது:

திருவண்ணாமலை அருகே ஏற்பட்ட ரயில் விபத்தில் உயிர் இழந்தவர்கட்கு காமராஜ் காங்கிரஸ் அனுதாபம் தெரிவித்துக் கொள்கிறது.

இந்த விபத்தில் இறந்தவர்கள் குடும்பங்களுக்கு ரூ10 ஆயிரமும், காயம் அடைந்தவர்கள் குடும்பங்களுக்கு ரூ.5 ஆயிரமும் தரப்படவேண்டும்.

இது குறித்து விசாரணையும் உடனடியாக நடத்தப் படவேண்டும் என்றார்.

## திருவாரூர் தங்கராசு

திராவிடர் கழகக் தலைவர் திருவாரூர் தங்கராசு கூறியதாவது:

திருவண்ணாமலை அருகில் நேற்று ஏற்பட்ட பயங்கர ரயில் விபத்து கண்டு தாளமுடியாத அதிர்ச்சிதுயரம் அடைந்தேன்.

அன்றாட பத்திரிக்கைகளில் இம்மாதிரி விபத்துக்களும் கொலைகொள்ளைகற்பழிப்பு போன்ற செய்திகளும் தொடர்ந்து வந்துகொண்டிருப்பது எந்த அளவுக்கு நாட்டில் நிர்வாகச் சீர்கேடும் சட்ட அமைதி சீர்குலைவும் ஏற்பட்டுள்ளது என்பதற்கு தகுந்த சான்றுகள் ஆகும். விபத்தில் உயிர் இழந்த குடும்பத்தினர் அனைவருக்கும் திராவிடர் கழகத்தின் சார்பில் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு தங்கராசு கூறினர்.

(7-ம் பத்தித் தொடர்ச்சி)

மற்ற அரசியல் பணிக்கு உள்ள மரியாதையையும் சிறப்பையும் இது தெளிவாகக் காட்டுகிறது என்பதோடு கூட பொய்யையே மூலதனமாகவும் தன்னலத்தையே பொதுச் சேவையாகவும் கொண்டு பித்தலாட்ட அரசியலில் ஈடுபட்டுள்ளவர் கட்டுக வர இருக்கும் சட்டப் பேரவைத் தேர்தலுக்கு முன்பு கிடைத்துள்ள பேரிடியாகும்.

நாட்டுநிலையைத் தெளிவாகப் புரிந்து கொண்டு வாக்களித்துள்ள ஆசிரியப்பெருமக்கள்பட்டதாரிகளுக்கும் திராவிடர் கழக சார்பில் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

வெல்க புரட்சித்தலைவர் தொண்டு,

இவ்வாறு திருவாரூர் தங்கராசு கூறினர்.

## செய்குத்தம்பி

தமிழ்நாடு முஸ்லிம்லீக் தலைவர் செய்குத்தம்பி கூறியதாவது:

வர இருக்கும் சட்டமன்ற தேர்தல் வெற்றிநிலைக்கு முன்னோடியாகஇந்த வெற்றியை தமிழகமக்கள் தந்திருக்கிறார்கள்

அனைத்திந்திய அண்ணா திமு கழகத்தின் தலைமையில் உள்ள ஜனநாயக முற்போக்கு அணியின் வெற்றியைமாற்றிட எந்த சக்திக்கும்இடம் இல்லை.

வரும் தேர்தலில் கழக அணிக்கு வெற்றியை அளிக்கமக்கள் தங்களை சித்தப்படுத்திக் கொண்டுவிட்டனர்.

## பி. மாணிக்கம்

இந்தியகம்யூனிஸ்ட்கட்சியின் தமிழ்நாட்டுத் தலைவர் மாணிக்கம் கூறியதாவது:

தமிழகத்தில் மேலவைத் தேர்தலுக்கு நடந்த 4 தொகுதிகளில் கிடைத்துள்ள வெற்றி தமிழகத்தின் அரசியல்போக்கினைத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது.

அனைத்திந்திய அண்ணா திமு கழகம் இந்திய கம்யூனிஸ்ட், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் ஆகிய கட்சியினர் சேர்ந்து ஆதரித்த வேட்பாளர்கள் வெற்றி பெற்று இருக்கிறார்கள்.

இப்படிப்பட்ட வெற்றியைத் தேடித்தந்த தமிழக மக்களுக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு மாணிக்கம் கூறினர்.

## சவுந்தரராஜன்

சென்னை மாவட்ட மார்க்சிஸ்ட் குழு சார்பில் சவுந்திரராஜன் கூறியதாவது:

எதேச்சாதிகாரச் சக்திகளுக்கு எதிராகவும் திமுக இந்திரா காங்கிரஸ் சர்வாதிகார சந்தர்ப்பவாத கூட்டணிக்கு எதிராகவும் மத்தியதரவர்க்க படிப்பாளிகளுக்கு மத்தியில் உருவாகி வரும் அரசியல் வளர்ச்சி போக்கை இந்த தேர்தல் முடிவு காட்டுகிறது.

## டி. பி. ஏழுமலை

ஜனதாக்கட்சித் தலைவர்களில் ஒருவரான டி.பி, ஏழுமலை கூறியதாவது:-

இந்த வெற்றி எதிர்பார்த்த வெற்றியாகும் அனைத்திந்திய அண்ணா திமு கழக அணியே வெற்றிபெறும் என்ற நிலை தமிழகத்தில் இருக்கிறது எம்.ஜி.ஆர் ஆட்சி காலத்தில் செய்த நன்மைகளைக் கண்டு படித்தவர்கள் ஓட்டு அளித்திருக்கிறார்கள்.

வரும் தேர்தலுக்குஇந்த வெற்றி முன்னோடியாக அமையும்,

# தி. மு. க. ஏடுகள் "கப்-சிப்"

மேலவைத் தேர்தலில் கழகத்துக்கு ஆசிரியர் பெருமக்களும், பட்டதாரிப் பெருமக்களும் மகத்தான வெற்றி அளித்துள்ளனர். பிடித்த மக்களிடம் புரட்சித் தலைவருக்கு ஆதரவுஇல்லைஎன்றும் கழகத்தின் எல்லாப் பகுதி மக்களையும் புரட்சித் தலைவர் பகைத்துக் கொண்டு விட்டார் என்றும் கருணாநிதி ஆட்கள்செய்து வந்த பொய்ப் பிரச்சாரத்தின் இடுப்பைஉடைத்திருக்கிறார்கள் இந்தப் பட்டதாரி பெரு மக்கள்!

4 இடங்களிலும் கழக அணி ஆதரவு பெற்ற தோழர்கள் மகத்தான வெற்றி பெற்று தி மு க இ காங்கிரஸ் ஆதரவு பெற்ற வேட்பாளர்கள் படுபாதாளத் தோல்வியை அடைந்திருக்கிறார்கள்.

தேர்தலில் கழக அணி 4 இடங்களிலும் வெற்றி பெற்றிருப்பது பற்றி தி மு க ஏடுகள் எந்தச் செய்தியும் வெளியிடவில்லை தேர்தல் முடிவைக் கூட அவர்கள் அறிவிக்க முடியாமல் திணறிப் போய் இருக்கிறார்கள்.

தி மு க ஒரு இடத்தில் வெற்றிபெற்றிருந்தால் கூட எத்தனை ஆர்ப்பாட்டங்கள் வாய்ச்சவடால்களை நடத்திக் காட்டி இருப்பார்கள்!

தமிழக அரசியலில் காற்று எந்தப் பக்கம் வீசுகிறது என்று திசை காட்டிய வாக்காளப் பெருமக்கள் வாழ்த்துக்கும், பாராட்டுக்கும், நன்றிக்கும் உரியவர்கள்.

Published by K. Ravindran on behalf of Thangamani Publications 275, Avvai Shanmugam Salai, Madras-14 and Printed by him at Print House, 1. First Main Road, United India Colony, Madras-24. Editor : E. PARASURAMAN

# மேலவை வெற்றி...

(முதல் பக்க தொடர்ச்சி)

யார் பக்கம் இருக்கின்றன-இனியும் இருக்கும் என்பதற்கு இந்த வெற்றிகள் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும்.

இவ்வாறு டாக்டர் நாவலர் அந்த அறிக்கையில் கூறியுள்ளார்.

## அனந்தநாயகி

அர்ஸ் காங்கிரஸ் கட்சியின் தமிழ்நாட்டுத்தலைவர் டி. என். அனந்தநாயகி கூறியதாவது:-

மேலவைக்காக 4 இடங்களில் நடந்த தேர்தலிலும் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக ஆதரவு பெற்ற வேட்பாளர்கள் வெற்றி பெற்றுள்ளதற்கு எனது பாராட்டுக்கள்.

ஆசிரியர்தொகுதிகளிலும் பட்டதாரி தொகுதிகளிலும் கழக ஆதரவு பெற்றவர்கள் வெற்றி பெற்று இருப்பது நல்ல சகுனமாகும்.

இந்த வெற்றி மேலும் பல வெற்றிகளைக் குவிக்கும்.

வருகிற சட்டமன்றதேர்தலிலும் கழக அணி வெற்றி பெறும் என்பதையே இது காட்டுகிறது.

இதற்கான திட்டங்களை துரிதமாக செயல் படுத்த முன் வர வேண்டும்.

இவ்வாறு அனந்தநாயகி கூறினர்.

## குமரிஅனந்தன்

கா.கா.தே.கா தலைவர் குமரி அனந்தன் கூறியவாவது:

இந்திரா காங்கிரஸ். திமுக அணி நிறுத்திய பட்டதாரி-ஆசிரியர் தொகுதி வேட்பாளர்கள் அனைவருமேதோல்வியைக் கண்டுள்ளனர்.

சென்றமாதம்அனைத்திந்தியஅண்ணாதிமுகழகபட்டதாரிகள்சங்கம் நடத்திய கூட்டத்தில் கலந்து கொண்டு பேசும் போது பட்டதாரிகளுக்கு கழக அரசு வழங்க உத்தரவிட்ட மாதம் ரூ. 50 மானியத்தை இ. காங்கிரஸ் அரசு வழங்காததற்குக் காரணம் அந்தக் கட்சியில் இருக்கும் பட்டதாரிகள் என்று கூறினேன், ஆகையால் அவர்களுக்கு பட்டதாரிகள் துயரம் தெரிவதில்லை.

அதேபோல் திமுகவினர் பட்டம் பெற்றோர் அனைவரும் அவர்களுடன் இருப்பதாக சொன்ன மாயை இந்த தேர்தல் மூலம் உடைபட்டு இருக்கிறது.

மொத்தத்தில் வரப்போகும் தேர்தலில் அனைந்திய அண்ணா திமுக மற்றும் ஜனநாயகக் கட்சிகள் சேர்ந்து அமைக்கும் அணி வெற்றிக் கொடி நாட்டப்போகிறது என்பதற்கு மேல்வைத் தேர்தல் முடிவுகள் கட்டியம் கூறுகிறது.

இவ்வாறு குமரி அனந்தன் கூறினர்.

## நெடுமாறன்

தமிழ்நாடு காமராஜ் காங்கிரஸ் தலைவர் நெடுமாறன் கூறியதாவது:-

சட்டமன்ற மேலவைத் தேர்தலில் அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம், காமராஜ் காங்கிரஸ் மற்றும் தோழமைக்கட்சியினர் ஆதரித்த வேட்பாளர்கள் வெற்றி பெற்றுள்ளனர்.

இந்த வெற்றியானது பின்னே வரும் யானைக்கு முன்னேவரும்மணியோசை போன்ற வெற்றியாகும்.

இதன்மூலம் நாளை நமதே என்பதை தமிழக மக்கள் குறிப்பாக உணர்த்தி இருக்கிறார்கள்.

இவ்வாறு நெடுமாறன் கூறினர்.

## தங்கராசு

திராவிடர் கழகத் தலைவர் திருவாரூர் தங்கராசு:

பட்டதாரிகள் மற்றும் ஆசிரியர் தொகுதிகளுக்கு நடைபெற்ற இடைத் தேர்தலில்அனைத்துஇந்திய அண்ணாதிமுகழகம்அடைந்துள்ள மாபெரும் வெற்றி படித்த மற்றும் அரசியல் தெரிந்த பெரு மக்களிடையே புரட்சித்தலைவர் எம்ஜிஆர் அவர்களது கடந்த இரண்டரை ஆண்டுகால தன்னல

(5-பத்திப் பார்க்க)

தலைமைக்கழக அறிக்கை எண். 43-80

# சமயநல்லூர் தொகுதி கழகத் தோழர்களுக்கு

மதுரை மாவட்டம் சமயநல்லூர் தொகுதியில் அடங்கியுள்ள இரு ஒன்றியங்களுக்கும் கீழே குறிப்பிடப்பட்டுள்ளவர்கள் கழகப் பொறுப்பாளர்களாக நியமிக்கப்படுகிறார்கள்.

**மதுரை கிழக்கு ஊராட்சி ஒன்றியம்:**

| | |
|---|---|
| ஒன்றிய அமைப்பாளர் : | பி. சேகர்(கள்ளந்திரி) |
| துணை அமைப்பாளர் : | ரங்கநாதன்(திருக்காணை) |
| ஒன்றிய அவைத்தலைவர் : | காராணம்(ஒத்தகடை) |
| பொருளாளர் : | நொண்டிசாமி (சக்திமங்கலம்) |

**மதுரை மேற்கு ஊராட்சி ஒன்றியம்:**

| | |
|---|---|
| அமைப்பாளர் : | வி.பி. நடராசன் (சின்னப்பட்டி) |
| துணை அமைப்பாளர் : | இராமமூர்த்தி(ஆலத்தூர்) |
| அவைத்தலைவர் : | சண்முகம் (குலமங்கலம்) |
| பொருளாளர் : | அர்ச்சுனன் (இரணியம்) |

திருமிகு, புரட்சித்தலைவர் அவர்களின் ஒப்புதலுடனும், பொதுச்செயலாளர் டாக்டர் நாவலர் அவர்களின் அனுமதியுடனும் இந்த அறிவிப்பு வெளியிடப்படுகிறது.

எச். வி. ஹண்டே, எம். எல். சி.,
அமைப்புச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு.க.

சென்னை-14
20-4-1980

# கழக தோழர்கள் கவனத்திற்கு

பொதுச்செயலாளர் அவர்களின் அறிக்கைக்கிணங்க உறுப்பினர் சேர்க்கும் பணி 30-4-80 அன்றோடு முடிவடைகிறது என்பதைக் கழகத் தோழர்களின் கவனத்திற்கு மீண்டும் கொண்டு வருகிறேன்.

மிகுந்த ஆர்வத்தோடு உறுப்பினர் சேர்க்கும் விண்ணப்பத்தாள்களைப் பெற்றுச் சென்றுள்ள கழகத் தோழர்கள் கடமை உணர்வோடு அவற்றை உரிய கட்டணத்துடன் தலைமைக் கழகத்திற்கு 30-4-80க்குள் அனுப்பிவைக்கவேண்டும் என்று பெரிதும் விரும்பி கேட்டுக்கொள்கிறேன்.

30-4-80க்குப்பின் வரும் விண்ணப்பத்தாள்களில் உள்ளவர்கள் பதிவு செய்யப்பட பொதுச்செயலாளர் அவர்களின் பிரத்தியேக அனுமதி தேவைப்படும்.

ஆகவே கழகத் தோழர்கள் பொறுப்புணர்ச்சியோடு உறுப்பினர் சேர்க்கும் விண்ணப்பத்தாள்களை உடனடியாகத் தலைமைக் கழகத்திற்கு அனுப்பிவைக்க வேண்டும் என்று மறுமுறையும் வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்.

ஏற்கனவே உறுப்பினராகப் பதிவு செய்து கொண்டவர்களுக்கான உறுப்பினர் கார்டுகள் சம்பந்தப்பட்டவர்களுக்கு அனுப்பிவைக்கப்படுகின்றன.

எம். எஸ். அப்துல் காதர்
தலைமை நிலையச் செயலாளர்

# மேல்வை தேர்தல்: ஓட்டு முழு விவரம்

சென்னை, ஏப். 20 தமிழ்நாடு சட்டமன்ற மேலவைக்கு 4 தொகுதிகளில் நடந்த தேர்தலில் கழக ஆதரவு வேட்பாளர்கள் அமோக வெற்றி பெற்றது தெரிந்ததே. வேட்பாளர்கள் பெற்ற ஓட்டு விவரம் வருமாறு:

## மேற்கு மத்திய தொகுதி

வாக்காளர் எண்ணிக்கை: 18791
பதிவான வாக்குகள்: 10,882
செல்லாதது: 586
இரா. ஜனார்த்தனம் (கழகம்) 5710
ஏ தேவராஜ் (இ காங். தி மு க ஆதரவு) 3,524
அந்தோணிமுத்து 79
ஏ. ராஜகோபாலன் -33
ஆர். சிவஞானம் -115
செழியன் 9
பழனிவேல் -580
ரவிச்சந்திரன் -246
ஜனார்த்தனம் வெற்றி.

## தஞ்சை

மொத்த வாக்காளர் எண்ணிக்கை 23, 300 பதிவான வாக்குகள் 16,335
செல்லாத வாக்குகள் 1141
ஜி. சுவாமிநாதன் 6577
கே எஸ் கணபதி-3,076
கிரன் 2,489
சிவக்கண்ணு-1524
பாலசண்முகம் 1395 (தி மு க-இ. காங் ஆதரவு)
ஹலாசயம்சுப்பிரமணியம்40
மரியநல்லு-93
சுவாமிநாதன் வெற்றி

## சென்னை-செங்கற்பட்டு

மொத்த வாக்காளர் எண்ணிக்கை - 10,138. பதிவான வாக்குகள்-6,978,
செல்லாதது 421
ஏ. லீலாவதி-3,391 (கழக ஆதரவு)
ஏ. ஆர். ஜனகன்-2,165 (தி.மு.க.-இ. காங்கிரஸ் ஆதரவு)
கே. அறிவழகன் -548
ஆர். ராமன்-1
எஸ். சுப்பிரமணியம்-19
பாப்பையா-192
பிரசன்னமாதவன் -7
வில்வநாதன் -118
வெங்கட்ராமராஜீ -116
ஏ. லீலாவதி வெற்றி

## மதுரை-ராமநாதபுரம்

மொத்தவாக்காளர் எண்ணிக்கை -10,740
பதிவானவாக்குகள் -8193
செல்லாதவாக்குகள் -552
பி.ஆர். தாமஸ் - 3,694 (கழக ஆதரவு)
எம்.பி.ஏ. அழகப்பன்- 181
ஜி.ஆறுமுகம் - 377
தனமணிரத்தினம் - 75
கே.திருமாறன் - 1,792 (தி.மு.க,இ.காங்.ஆதரவு)
எஸ்.பாஸ்கோ - 194
முகமதுஷரீப் - 126
முத்துகணபதி - 13
ஜி.ஜெயராஜ் - 1,219
பி.ஆர்.தாமஸ் வெற்றி.

# குவியுது காண் தேர்தல் நிதி

## நிதி அளித்தோர் பட்டியல்

| | |
|---|---|
| ராஜம்மா | 2-00 |
| ஜெயலட்சுமி, ஜோதியம்மாள் நகர் | 2-00 |
| பவானி, ஜோதியம்மாள் நகர் | 2-00 |
| வி. பேசி, 70-வது வட்ட மகளிர் அமைப்பாளர் | 10 00 |
| கழகத் தோழர்கள் கொடுத்தது | 16-25 |

சென்னை, 110வது வட்டம் வத்தலக்குண்டு ஆறுமுகம் நினைவு மன்றத்தின் சார்பில் பொதுக்கூட்டம நடைபெற்றபோது கூட்டத்தில் திரு. அடியார், அவர்கள் துண்டேந்தி வசூலித்த தேர்தல் நிதி: 199-50

| | |
|---|---|
| எஸ் பி ஜேசுதாஸ்-திருநின்றவூர் | 5-00 |

திருவள்ளூரில் திரு. ஜேப்பியார் கலந்துகொண்ட கூட்டத்தில் திரு. ஆவடி சிவா, முகவை சுந்தரம், கே. மனோகரன், இராமகிருஷ்ணன் ஆகியோர் துண்டு ஏந்தி வசூலித்த தொகை 118 89

7-வது வார்டு அமைப்பாளர்,

| | |
|---|---|
| பி சீனிவாசன்-திருவள்ளூர் | 5-00 |
| எஸ் டி ராஜ் - பொருளாளர் - திருவள்ளூர் | 5-00 |
| தேவன்-தலைவர்-திருவள்ளூர் | 5-00 |
| மணி | 5 00 |
| எம் ராமு | 5 00 |
| இ கண்ணாயிரம் | 5-00 |
| வி எம் பட்டாபிராமன் | 5-00 |
| டி கே முருகேசன் | 5-00 |
| பெரியகுப்பம் பாரத் எம் ஜி ஆர் நற்பணி மன்றம் | 10.00 |

நந்தனம் மின்சார வாரிய ஊழியர் திரு. டி. கிருஷ்ணசாமி அவர்கள் மின்சார ஊழியர்களிடத்திலும் வியாபாரிகளிடத்திலும் வசூலித்த தேர்தல் நிதி விவரம்:

| | |
|---|---|
| டி கிருஷ்ணசாமி, எம்,இ.எஸ், | 20 00 |
| கே கண்ணசன், மளிகை, வடபழனி, சென்னை | 10 00 |
| எஸ் பாலன் | 5 00 |
| சீனிவாசன் | 5-00 |
| ராசேந்திரன் | 5-00 |
| மூக்கா. ராஜபாண்டி | 5-00 |
| எம். சுப்புராஜு, மளிகை, வடபழனி, சென்னை | 5-00 |
| கே. செல்வராஜ். சென்னை | 5-00 |
| என் ராமன், எம. இ.எஸ். . சென்னை | 5-00 |
| வி. ராமகிருஷ்ணன் ,, ,, | 5 00 |
| டி. ஆதிநாராயணன் ,, ,, | 5-00 |
| கே. கன்னியப்பன் ,, ,, | 5 00 |
| வி. கன்னியப்பன் ,, ,, | 5-00 |
| ஏ. ராஜாமணி ,, ,, | 5-00 |
| கிருஷ்ணமூர்த்தி ,, ,, | 5 00 |
| மணி. | 5-00 |
| ஆர் பொன்னுசாமி, டிக்கடை சென்னை | 5-00 |
| கே அங்குசாமி | 5 00 |
| நமச்சிவாயம், சென்னை | 5-00 |
| கே கோதண்டம், எம் இ எஸ் சென்னை | 5-00 |
| இ முத்து, சென்னை | 2-00 |
| குணசேகரன், எம் இ எஸ் சென்னை | 2-00 |
| காத்தவராயன், எம் இ எஸ் சென்னை | 2-00 |
| பி டி லிங்கம் | 2 00 |
| முகமது ஜலீல் | 2-00 |
| வி ஸ்ரீதரன் | 2 00 |
| ஏ எஸ் அக்பர் அலி | 1-00 |

எஸ். ராமச்சந்திரன்
பொருளாளர்
அனைத்திந்திய அண்ணா தி மு கழகம்
சென்னை-600014

குறிப்பு: பொதுக் கூட்டங்களில் புரட்சித் தலைவர், பொதுச் செயலாளர், பொருளாளர் மற்றும் கழக முன்னணியினரிடம் தேர்தல் நிதி தருகிறவர்கள் தங்களது முகவரியையும் குறித்துக் கொடுத்துதவ வேண்டுகிறோம்.

## தலைமைக் கழக அறிக்கை எண் 41-80

# வேட்பு மனு தந்திருப்பவர்கள் வைப்புத்தொகை கட்ட வேண்டுகோள்!

அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் சாபாக சட்ட மன்றத்தேர்தலில் போட்டியிட வேட்பு மனு கொடுத்துள்ளவர்கள் தேர்தலில் செலவு செய்வதாக வாக்களித்துள்ள தொகையை முன்பணமாக தலைமைக் கழகத்தில் 25-4-80க்குள் ஒப்படைக்கு மாறு கேட்டுக்கொள்ளப்படுகிறாகள்.

. யார் வேட்பாளராகத் தேர்ந்தெடுக்கப்படுகிறார்களோ அவர்களது முன் பணம் அவர்களிடம் திருப்பித் தரப்பட மாட்டாது. அந்தத் தொகை அவர்களுக்குரிய தொகுதியின் செலவுக்கு அளிக்கப்படும்.

யார் யார் தேர்ந்தெடுக்கப்படவில்லையோ, அவர்கள் கட்டிய தொகை-முடிவுகள் அறிவிக்கப்பட்டவுடன் அவர்களிடம் திருப்பித் தரப்படும்.

இரா. நெடுஞ்செழியன்
பொதுச்செயலாளர்

சென்னை-14
18-4-80

## திருவண்ணாமலைபாலத்தில்ரயில்விழுந்துவிபத்து

# 20 பேர் சாவு

# நாசவேலையா?

## புலன் விசாரணை தீவிரம்

சென்னை, ஏப் 20-திருவண்ணாமலை அருகே ஆற்றுப் பாலத்தில் செல்லும்போது ரயில் ஆற்றுக்குள் விழுந்து 20 பேர் மரணம் அடைந்தனர். இந்த விபத்துக்கு நாச வேலை காரணமா என்பது பற்றி தீவிரமாக புலன்விசாரணை நடக்கிறது.

விழுப்புரத்திலிருந்து காட்பாடிக்கு நேற்று பிற்பகல் ஒரு பாசஞ்சர் ரயில் போய்க் கொண்டிருந்தது. திருவண்ணாமலை பக்கம் ரயில் போகும்போது, தண்டரை, வேளாநந்தல் ஆகிய ரயில்நிலையங்களுக்கிடையே உள்ள ஆற்றுப்பாலத்தில் இந்த விபத்து நேரிட்டது. என்ஜினும், 2 பெட்டிகளும் பாலத்தை கடந்துவிட்டன. அதை அடுத்த 3 பெட்டிகளும் தடம் புரண்டு ஆற்றுக்குள் விழுந்துவிட்டன. ஒரு பெட்டி பாலத்தில் தொங்கிக்கொண்டு இருந்தது.

கீழே விழுந்தபெட்டிகள் நொறுங்கின. அந்தப்பெட்டிகளுக்குள் இருந்த 18 பேர் இறந்து விட்டனர் நூற்றுக்கணக்கானவர்கள் படுகாயம் அடைந்தனர்.

படுகாயம் அடைந்தவர்கள் திருவண்ணாமலை ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகப்பட்டார்கள். அங்கு 2 பேர் இறந்தனர்.

ஆக மொத்தம் 20 பேர் இறந்துவிட்டது பற்றிய துயரச்செய்தி கிடைத்துள்ளது.

ஆஸ்பத்திரியில் சிகிச்சைபெறும்25 பேருக்கு லேசான காயம். அவர்கள் சிகிச்சை பெற்று வீடு திரும்பிவிட்டார்கள். மற்றவர்களுக்கு தொடர்ந்து சிகிச்சை அளிக்கப்படுகிறது.

படுகாயமுற்றவர்களில் சிலரது நிலைமை கவலைக்கிடமாக உள்ளது.

விபத்துக்குள்ளான ரயிலின் கார்டு போலையா லேசான காயத்துடன் உயிர் தப்பினார். விபத்து பற்றி தகவல் கிடைத்ததும் ரயில்வே இலாகா துணை அமைச்சர் ஜாபர் ஷெரீப் சென்னைக்கு விமானத்தில் விரைந்தார்.

அவர் விபத்து நடந்த இடத்துக்குச் சென்றார். சென்னையில் இருந்த மத்திய உள்துறை இலாகா துணை அமைச்சர் வெங்கடசுப்பையாவும் திருவண்ணாமலைக்கு விரைந்தார்.

பாண்டிச்சேரிக்குச் சென்றிருந்த ரயில்வே ஜெனரல் மானேஜர் டி. எம். தாமஸ் சுற்றுப்பயணத்தை ரத்து செய்துவிட்டு விபத்து நடந்த இடத்துக்குவிரைந்தார்.

சென்னையில் இருந்து டாக்டர்கள் குழுவுடன் ரயில்வே உயர் அதிகாரிகள் விபத்து நடந்த இடத்துக்குச் சென்றனர். காயமுற்றவர்களுக்குதீவிரமாக சிகிச்சை அளிக்கப்படுகிறது.

### கமலபதி திரிபாதி

விபத்து பற்றி கேள்விப்பட்டு ரயில்வே அமைச்சர் கமலபதி திரிபாதி வருத்தம் தெரிவித்தார். இறந்தவர்கள் குடும்பத்துக்கு அனுதாபம் தெரிவித்தார்.

### மோப்ப நாய்

இந்த கோர விபத்துக்கு நாச வேலை காரணமா என்பது பற்றி புலன் விசாரணை நடக்கிறது. துப்பு துலக்குவதற்கு சென்னை, திருச்சி ஆகிய இடங்களிலிருந்து போலீஸ் மோப்ப நாய்கள் கொண்டு போகப்பட்டுள்ளன.

ரயில் விபத்தில் இறந்தவர்களின் பெயர்கள் சென்னை எழும்பூர், திருச்சி விழுப்புரம், திருவண்ணாமலை, காட்பாடி ஆகிய ரயில் நிலைய அறிவிப்புப் பலகைகளில் பொதுமக்களின் பார்வைக்கு எழுதி வைக்கப்பட்டுள்ளன.

இறந்தவர்களின் உறவினர்கள் விபத்து நடந்த இடத்துக்குச் செல்ல இலவச பாஸ் கொடுக்கப்பட்டுள்ளது.

## கைத்தறி நெசவுத் தொழிலாளர் பேரணி

சென்னை, ஏப். 20. கைத்தறி நெசவுத் தொழிலாளர் பாதுகாப்பு நாளான 24-4-80ல் நடைபெறவிருக்கிற கைத்தறி நெசவுத் தொழிலாளர்கள் பேரணி-பொதுக் கூட்டங்களில் அண்ணா தொழிற சங்கப் பேரவையின் சார்பில் சம்பந்தப்பட்ட பகுதிகளைச் சார்ந்த பேரவையின் நிர்வாகிகளும், கழக, தொழிற்சங்க முன்னணியினரும், சி. ஐ. டி. யு, ஏ. ஐ. டி. யு. சி. மற்றும் சகோதர தொழிற்சங்கத் தலைவர்களும கலந்து கொள்கிறார்கள்.

கழக தொழிற்சங்கப் பிரிவு செயலாளா வை. பெருமாள் கரூரிலும் பேரவையின் கைத்தறிப் பிரிவு செயலாளர் அனகாபுத்தூர் சி இராமலிங்கம் எம் எல் சி சேலத்திலும் பேரவைத் துணைத் தலைவர் எஸ் நம்பிராசன் நாகர்கோவிலிலும் ஊர்வலத்திலும், பொதுக் கூட்டத்திலும் கலந்து கொள்கிறார்கள்

## சிவகெங்கை சேதுராசன்

### கலைக்குழு நிகழ்ச்சிகள்

20- திருவள்ளுவர்சாலை, 21-நுங்கம்பாக்கம், 22, 23, 24, 25- ஆயிரம்விளக்கு தொகுதி, 26 - இராதா கிருஷ்ண நகர், 27-28 சீர்காழி.

சிவகெங்கை சேதுராசன்
14-14-வது குறுக்குதெரு,
நந்தனம் விஸ்தரிப்பு
சென்னை-35

# தேர்தல் நேரத்தில் அதிகாரிகளை மாற்றுவதா?

## ஜனாதிபதிக்கு செய்குத்தம்பி தந்தி

சென்னை ஏப் 20-தேர்தல் தேதி அறிவிக்கப்பட்டபிறகு உயர்தர அதிகாரிகளை மாற்றுவது தேர்தல் விதிக்கு முரண் ஆனது இதனைத் தடுத்து நிறுத்த வேண்டும் என்று ஜனாதிபதிக்கும் தலைமைத் தேர்தல் கமிஷனருக்கும் தமிழ் நாடு முஸ்லிம் லீக் சார்பில் செய்குத்தம்பி அவசரத் தந்தி அனுப்பி இருக்கிறார்.

தேர்தல் தேதி அறிவிக்கப்பட்ட பிறகு உயர் அதிகாரிகள் போலீஸ் அதிகாரிகளை மாற்றம் செய்வது தேர்தல்விதிகளுக்கு முரண் ஆனது.

ஆகவே இதில் தலையிட்டு இந்த மாற்றல் உத்தரவை ரத்துசெய்யக்கோரி ஜனாதிபதிக்கும் இந்தியத்தலைமை தேர்தல் அதிகாரிக்கும் மத்திய உள்துறை அமைச்சருக்கும் செய்குத்தம்பிதந்தி கொடுத்து இருக்கிறார்.

## சென்னை-செங்கை மாவட்ட மகளிர் பிரிவு ஆலோசனைக் கூட்டம்

சென்னை செங்கை மாவட்ட மகளிர் பிரிவு ஆலோசனைக் கூட்டம் 22-4-80 செவ்வாய் மாலை 4 மணியளவில் கழகத் தலைமை நிலையத்தில் நடைபெறும். அது சமயம் தொகுதி வட்ட மகளிர் பிரிவு தோழியர்கள் தவறாது கலந்து கொள்ள வேண்டுகிறேன்.

பா. வளர்மதி
மகளிர் பிரிவு செயலாளர்

## பேச்சாளர் முகவரி

ஆரோக்கியதாஸ்
6, கு. அ. அ. 1வது தெரு
ஆயிரம்விளக்கு - சென்னை 6

## கலைக்குழு முகவரி

நெல்லை கலையரசன்
3-7 அரசு ஊழியர் குடியிருப்பு
கோட்டூர்புரம்
சென்னை - 600085

## சென்னை-செங்கை மாவட்ட மேதின விழா: பேரவை வேண்டுகோள்

சென்னை-செங்கை மாவட்டங்களில் உள்ள அண்ணா தொழிற்சங்கப் பேரவையின் இணைப்பு சங்கப் பிரதிநிதிகள் ஆலோசனைக் கூட்டம் 24 4 80 காலை 10 மணிக்கு தலைமைநிலையத்தில் பேரவைப் பொருளாளர் கே. இராசேந்திரன் தலைமையில் நடைபெறும். திருமிகு எஸ். இராகவானந்தம் எம்.எல்.சி. அவர்கள் கலந்துகொண்டு கருத்துரை வழங்குவார்கள். இணைப்பு சங்கப் பிரதிநிதிகள் தவறாது கலந்து கொண்டு சிறப்பிக்க வேண்டுகிறோம்.

அன்புள்ள

சா. கணேசன்,
எஸ். பி. இராமலிங்கம்
பேரவை செயற்குழு உறுப்பினர்கள்,
சென்னை-செங்கை மாவட்டம்

**சந்தா விவரம்**

| | | | |
|---|---|---|---|
| 1 | வருடச் சந்தா தொகை | ரூ. | 130 |
| 6 | மாதச் சந்தா தொகை | ரூ. | 65 |
| 3 | மாதச் சந்தா தொகை | ரூ. | 32-50 |

3 மாதத்திற்கு குறைவான சந்தா தொகை ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது.

நிர்வாகி:

"அண்ணா"

275, அவ்வை சண்முகம் சாலை, சென்னை-600014


# அண்ணா



'மேகத்துக்கும் தாகமுண்டு' படத்தில் ரஜ்னிசர்மா

சங்கராபரணம் ஒரு அமரகாவியம்! பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை மலரும் குறிஞ்சிமலரைப்போல் கலைப்பூங்காவில் மலர்ந்த வாடாமலர். தேனையே மருந்தாகக் கொடுப்பதுபோல் சமுதாய சீர்திருத்தக்கருத்துக்களை டைரக்டர் விஸ்வநாத் தந்துள்ளார்.

# "சங்கராபரணம்"

உயர்ந்தவர்கள் என்று சொல்லப்படும் குலத்தில் பிறந்து இசையால், குணத்தில் உயர்ந்து நிற்பவர் சங்கர சாஸ்திரி!

தாழ்ந்த குலத்தில் உதித்தாலும் இசையிடமும், நாட்டிய கலையிடமும் தன்னை ஒப்படைத்து, இதயத்தால் உயர்ந்து நிற்கும் தாசிப் பெண் துளசி.

சங்கரசாஸ்திரியின் இசைமேகத்தை கண்டால் வண்ணக்கலாபமென துளசி நடனமாடத் துவங்கிவிடுவாள்.

அவர் நாவசைந்தால் அவளது கால்கள் கலீர், கலீர், என்ற ஓசையை எழுப்பத் துவங்கிவிடும்.

சங்கர சாஸ்திரியின் இசையை தெய்வமாக எண்ணி தன்னை பக்தையாகக் கருதி அவள் வழிபடுகிறாள்.

ஒருநாள்,...

ஜமீன்தார் ஒருவன் வெறியோடு வந்து அவள் உடலை விருந்தாக்கிக்கொள்கிறான். அவள் அதைக்கூடப் பொருட்படுத்தவில்லை. ஆனால்...

தெய்வத்துக்கு நிகராக எந்த இசை மேதையை கருதிவந்தாளோ அந்த சங்கர சாஸ்திரியின் படத்தை உன் மத்தன் எட்டி உதைப்பதைக்கண்டு அவள் உள்ளம் பொங்குமாங்கடலாகிறது! உடைந்த கண்ணாடித் துண்டு ஒன்றை எடுத்து அவனைக் குத்திக் கொல்கிறாள். அவனது ரத்தத்தை சங்கர சாஸ்திரிகளின் காலடியில் அபிஷேகம் செய்கிறாள்.

சங்கர் சாஸ்திரி அவளை மீட்கிறார்-குற்றவாளி அல்லவென்று! ஊர்மக்கள் எல்லோரும் பார்த்து நிற்க அந்த உயர்ந்த குலத்தைச் சேர்ந்தவர், தாழ்ந்த தாசிப் பெண்ணை சாரட் வண்டியில் பகிரங்கமாக நெஞ்சுரத்தோடு அழைத்துக் கொண்டு வீட்டுக்கு வருகிறார்.

எற்றத்தாழ்வு பேசி நல்ல உள்ளங்களை நோகச் செய்பவர்கள் அவர்களைப் பிரிக்கின்றனர்.

சங்கர சாஸ்திரி சோமயாஜுலு

டைரக்டர் விஸ்வநாத்

காலம் மாறுகிறது கர்நாடக சங்கீதம் என்ற தேன்கடலில் திளைத்திருந்த மக்கள் புதியவரவான மேலை நாட்டு இசை என்கிற சர்க்கரை பாகை சப்புக் கொட்டி சுவைக்க ஆரம்பிக்கிறார்கள்.

செல்வ செழிப்போடு இருந்த சங்கர சாஸ்திரி கடனில் மூழ்கி கஷ்டமான நிலையில் தாயில்லாத தனது பெண் சாரதாவோடு வாழ்க்கையை நடத்தி வருகிறார்.

துளசி தன் மகன் சங்கரனோடு சங்கரசாஸ்திரி வாழும் அதே ஊருக்கு வருகிறாள். மகனை அனுதைப்பால் அவரிடம் இசைபயில அனுப்புகிறாள். சிறுவன் சங்கரன் அவரிடம் ஆர்வத்தோடு இசை பயில்கிறான்.

சங்கர சாஸ்திரியின் இசையின் மேன்மையை மீண்டும் ஊருக்குஉணர்த்த தனது பூர்வீகச் சொத்தை துளசி பயன்படுத்துகிறாள். அவர்பெயரால் ஒரு அரங்கு ஒன்று அமைக்கிறாள்.

சாஸ்திரியின் மகள் சாரதாவிற்கு திருமணமும் அன்றே சங்கரசாஸ்திரியின் இசை நிகழ்ச்சியும் நடக்கிறது. மேடையில் வந்து அமர்ந்த சங்கரசாஸ்திரி எதிரே கூடியுள்ள மக்கள் வெள்ளத்தைப் பார்க்கிறார். தனது இசையிடம மக்கள் இன்னமும் பெருமதிப்பு வைத்திருக்கின்றனர் என்பதை உணர்ந்ததும் அந்த இசை மேதையின் இதயத்தில் ஆனந்தம் பெருக்கெடுக்கிறது. அவர் இசை மழை பொழிகிறார். இடையில் நெஞ்சு வலியால் அவர் துடிக்கிறார் இசை மழையைத்தொடர்ந்து பெய்யச் செய்கிறான் அவர் பயிற்று வித்த சிறுவன் சங்கர சாஸ்திரி சரியான ஒரு வாரிசைத்தந்து விட்ட மன நிறைவோடு தம்புராவில் தலையைச் சாய்க்கிறார். அவர் காலடியில் துளசி விழுகிறாள். இசைமேதையின் உயிரைத் தேடி நடனக்கலை அரசியின் உயிரும் சென்றுவிடுகிறது.

## நாலுகதருமன்

சங்கராபரணம படத்தின் கதை-கதாபாத்திரங்கள் காட்சிகள், பாடல்கள் நமது இதய நாடியை மீட்டி எங்கோ அழைத்துச் சென்று, சிரிக்க வைத்து, சிந்திக்க வைத்து, சிலிர்க்க வைத்து, கண்ணீர் சிந்த வைத்து நம்மை மீண்டும் இந்த உலகிற்கு அழைத்து வருகின்றன! மீண்டும், மீண்டும் நமது எண்ணங்கள் அவைகளையே சுற்றிச் சுழல்கின்றன. அவைகளிடமிருந்து நம்மை மீட்டுக் கொள்ள முடியவே இல்லை

நிச்சயமாக இது படமல்ல. அமரகாவியம். பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை மலரும் குறிஞ்சி மலரைப் போல், கலை பூங்காவில் மலர்ந்த வாடாமலர் சங்கராபரணம்!

சமுதாய சீர்திருத்தக் கருத்துக்களை சொல்லும்பொழுது எவ்வளவு கவனமாக இருக்கவேண்டும் பக்குவமாகக் கூறவேண்டும் என்பதற்கு உதாரணமாக பேரறிஞர் அண்ணாவின் படங்களைக கூறவேண்டும்.

சீர்திருத்தக் கருத்துக்களைப் படங்களில் வலிந்து திணித்தால் திருந்தவேண்டியவர்கள்கூடமிரட்சியோடு அல்லது வெறுப்போடு ஒதுக்கும் நிலை ஏற்பட்டுவிடும். மருந்தைப் தேனில் குழைத்துக் கொடுப்பதைப்போல்கூட அல்ல, தேனையே மருந்தாகக் கொடுப்பதைப் போல் இந்தப் படத்தை விஸ்வநாத் தந்துள்ளார்.

உயர்வு தாழ்வு என்பது உள்ளத்தில் தானே தவிர வேறு எதிலும் இல்லை என்பதையும் ஆச்சாரம் என்பது உள்ளத் தூய்மைதானே தவிர குலத்தினால் வருவது அல்ல. என்பதையும் எத்தனை அழகாக சித்தரித்திருக்கிறார்!

சங்கராபரணம் படம் துவங்குகிறது ஸ்ட்ரீம் போட்டின் மேலேநின்றபடி அந்தச் சிறுவன் சங்கரன் குரல்எழுப்புகிறான். மலைகளுக்கிடையில் அது எதிரொலிக்கிறது. பின்பு தாயின் அருகே வந்து அமர்கிறான். காலடியில் இருந்த ஒரு குடம் இன்னொரு குடத்தின் மீது மோதி ஓசை எழுப்புகிறது. அவன் அந்த இரு குடங்களையும் கையில் எடுத்துக்கொள்கிறான், இரண்டையும் மோதி மோதி ஓசை எழுப்புகிறான். அதற்கேற்ப எதிரில் உள்ளவர் நெருப்புப் பெட்டியில் குச்சியினால் தாளம் போடுகிறார்.

## கலை விருந்து

சிறுவன் சங்கரன் கண்களில் அருகில் அமர்ந்திருந்த ஒரு பெண்மணியின் இடுப்பில் தொங்கும் சாவிக் கொத்து தென்படுகிறது. அதை எடுத்து குலுக்கி தாளத்திற்கு ஏற்ப இசைக்கிறான்.

சாதாரணமாக எல்லாச் சிறுவர்களையும் போல் சங்கரனையும் வேடிக்கை பார்க்க வைத்து வேறு விதமாக விளையாடச் செய்து காண்பித்திருக்கலாம். அப்படியில்லாமல் அவனுக்கு எதைப் பார்த்தாலும் இசையாகவும், தாளமாகவும் தென்படுவதாகக் காட்டி அந்தக் கதாபாத்திரத்தை அழகாக அறிமுகப் படுத்தியுள்ளார் விஸ்வநாத்.

அடுத்த காட்சி- பொழுது புலர்கிறது. சங்கர சாஸ்திரி ஆற்றங்கரைக்கு குளிக்க வருகிறார். வேட்டியைத் துவைத்து காயவைக்கிறார். அதில் தெரியும் ஓட்டைகள் மூலம் அவரது வறுமை தெரிகிறது. கம்பீரமாகத் திரும்பிச் செல்கிறார். அவரது காலடி பட்ட இடத்தை துளசி கண்களில் ஒத்திக்கொள்கிறாள். கதையில் இடம்பெறுபவர்கள் குணத்தை அழகாகச் சித்தரித்து நமக்கு அறிமுகப் படுத்துகிறார்.

கடந்தகாலம் துளசியின் நினைவுத் திரையில் நிழலாடுகிறது.

(வளரும்)

# நட்சத்திரம்

லட்சக் கணக்கில் பணம் சம்பாதிக்கும் ஒரு நடிகையின் வாழ்க்கை வெளியுலகிற்கு ஆடம்பரமாகவும் கவர்ச்சி கரமாகவும் இருக்கிறது. ஆனால் அவள் உண்மையிலேயே மகிழ்ச்சியோடு இருக்கின்றாளா? வாழ்க்கையில் நிறைவும் நிம்மதியும் காண்கின்றாளா?

இந்தக் கேள்விகளுக்கு "இல்லை" என்ற பதிலைத் தருகிறது "நட்சத்திரம்" படத்தின் கதை!

ஒரு ரசிகனையும் நடிகையையும் இணைத்து விறுவிறுப்பாக கதையை எழுதியுள்ளார்.

பாடுபட்டுதான் உழைத்தும் அதன் பலனை யார் யாரோ அனுபவித்துக் கொண்டு தன்னை எந்தவித உணர்ச்சியுமற்ற இயந்திரமாகக் கருதுவதைக் கண்டு குமுறும் இடத்தில் ஸ்ரீபிரியா நன்றாக நடித்துள்ளார்.

தான் பாடிய பாடலை "டேப்"பில் பதிவு செய்ததைக் கேட்டு விட்டு நாணத்தோடு கூடையைத் தலையில் கவிழ்த்தபடி செல்லும் கட்டத்தில் அவர் நடிப்பு அருமை!

ஹரிபிரசாத் சுபாஷிணி இணை பொருத்தமாக உள்ளது அவர்கள் இருவரும் வம்பு வளர்ப்பதுநல்ல கலகலப்பு.

மோகன் பாபு ஸ்டைல் சோமசுந்தர் மிடுக்கு எடுப்பாக உள்ளது.

தமிழ்த் திரையுலகின் முன்னணி நடிகர்கள் பலரை நடிக்கவைத்து ரசிகர்களை ஈர்க்க முயற்சித்திருக்கின்றனர்.

கண்ணதாசன், புலமைப் பித்தனின் பாடல்கள் யாவும் சங்கர் கணேஷ் இசையமைப்பில் இனிமையாக உள்ளன.

"அவளொரு மேனகை" "வானம் இங்கேமண்ணில் வந்தது" என்ற இரு பாடல்கள் முதலிடம் வகிக்கின்றன.

தர்மராஜ் எழுதியுள்ள உரையாடலகள் கருத்தாழத்துடன் சுவையாக உள்ளன.

தாசரி நாராயணராவ் கதை, திரைக்கதை எழுதி டைரக்ட் செய்துள்ளார். திரைக்கதையில் இன்னும் கவனம் செலுத்தியிருக்கலாம், தேவையின்றி அதிகமாக இழுத்திருப்பது போல் பலகாட்சிகள் வருவதைத் தவிர்த்திருக்கலாம்.

## எக்ஸ்ரே

பொழுதுபோக்கு அம்சங்களுடன் அலுப்பு தட்டாத வகையில் தாசரி இயக்கியுள்ளார்

மொத்தத்தில் நட்சத்திரம் மின்னுகிறது

# மனசா வாசாகர்மனு

(மலையாளம்)

மணமான ஒரு பெண்ணுக்கு ஆசைவார்த்தை காட்டி சுகு கெடுத்துவிடுகின்றான். இந்தக் காட்சியைக் கண்ட கணவன் மனைவியையும் நண்பனையும் விரட்டுகிறான் தன்னை மணந்து கொள்ளும்படி வாழ்விழந்தவள் கெஞ்சுகிறாள். இதைப் போல் எத்தனை பேரை ஏற்றுக் கொள்வதென்று சுகு மறுக்கிறான், அவள் தற்கொலை செய்து கொள்கிறாள்.

முறைப்பெண்ணைமணந்து கொள்ளும் அவனை மிரட்சி வாட்டுகிறது. மனைவியை தொட்டால் மாண்டவள் நினைவு வந்து செயலிழக்கிறான். அவனது மனைவி சுமித்ரா தன் தாபத்தைத் தீர்த்துக்கொள்ள டாக்டர் வேணுவை நாடுகிறாள்.

சுகு இன்னொருவனுக்கு செய்த துரோகத்தை போலவே அவனுக்கும் ஒ நண்பன் துரோகம் செய்கிறான்

முடிவு துணிச்சலானது சோமன், சுகுமாரன், சீமா, ஜெயபாரதி. சுகுமாரி, பிரதிமா ஆகியோர் நன்கு நடித்துள்ளனர்.

ஏகலைவன் கதைக்கு ஷெரீப் வசனம் எழுதியுள்ளார் சந்திரமோகன் ஒளிப்பதிவு செய்துள்ளார்

ஐ வி. சசி திறம்பட இயக்கி தரமான படமொன்றைத் தந்துள்ளார்.

# சங்கர் டைரக்ஷனில் புதிய படம்

கே சங்கர் டைரக்ஷனில் சிவகாமி கிரியேஷன்சார் வண்ணப்படம் ஒன்றைத் தயாரிக்கின்றனர்.

இதன் துவக்கவிழா ஏவி எம் ஸ்டுடியோவில் பாடல் பதிவுடன் துவங்கியது.

"கொஞ்சம்தொடட்டுமா தொட்டா குளிக்கணும்" என்று கவிஞர் கண்ணதாசன்எழுதிய பாடலுக்கு சங்கர்கணேஷ் இசை அமைக்க மலேசியா வாசுதேவன், வாணிஜெயராம் பாடினர்.

நாகேஷ் முக்கியமான முற்றிலும் மாறுபட்ட ஒரு வேடத்தில் நடிக்கிறார்.

விஜயன், சரிதா, வடிவுக்கரசி, மனோரமா, காந்திமதி எம்.என். நம்பியார் தேங்காய் சீனிவாசன், சுருளிராஜன் ஒரு விரல் கிருஷ்ணராவ், செல்வராஜ் சாருலதா, விஜயசந்திரிகா சந்திரலேகா ஆகியோர் நடிக்கின்றனர்.

பஷீர் கதைக்கு ராமானுஜம் திரைக் கதையும் ஏ.எஸ். பிரகாசம் வசனமும் எழுதுகின்றனர்.

எஸ் என் மீனாட்சிசுந்தரம் ஒளிப்பதிவு செய்கிறார் புலமைபித்தன் உ. தயவன் ஆகியோர் பாடல்களை எழுதுகின்றனர்

கே சங்கரின்மகன் எஸ் சிவப்பிரகாசம் தயாரிக்கிறார்

'ஸ்ரீ தவி' படத்தில் சுதா

# சாம் டி. தாசன் டைரக்ஷனில் மயக்கம்

சிசிலியா புரொடெக்ஷன்சார் 'மயக்கம்' என்ற வண்ணப்படம் ஒன்றைத் தயாரிக்கின்றனர்.

இந்த இசைச்சித்திரத்தில் வடநாட்டு நட்சத்திரம் ஒருவர் நடிக்கிறார்.

பத்மபிரியா, வள்ளி, பண்டரிபாய், ஹெரால்ட் ராமசாமி, ராஜவேலு மற்றும் பலர் நடிக்கின்றனர்.

மதுசூதன் ஒளிப்பதிவு செய்கிறார் பீட்டர்-ரூபன் இசையமைக்கின்றனர் சாம்-டி- தாசன் திரைக்கதை வசனம் எழுதி இயக்கி வருகிறார். ஏட்ரியல் தாசன் பிரபாகர் தயாரிக்கின்றனர்.

பத்திரிகைத்துறையில் புகைப்பட நிபுணராகப் பணிபுரியும் பக்தா கதை வசனம் எழுதி டைரக்ட் செய்துள்ள 'அந்தாலராசி' தெலுங்கு படத்தில் ராஜ்குமார், ரத்தி



'காதல் காதல் காதல்' படத்தில் ரமணன், தீபா